உ

ஸ்ரீ குகமயம்.

# சுவாமிமலைத் தலபுராணம்

—o—



ஸ்ரீ சுவாமிநாதசுவாமி தேவஸ்தானத்தாரால்
வெளியிடப்பட்டது.

1956.

2-ம் பதிப்பு ]

[ விலை 3 அணா.

## தேவஸ்தான இதர வெளியீடுகள்.

---

1. நவரத்ந மாலை விலை அணா 1.
2. ஷஷ்டி கவசம் விலை அணா 2.



தெற்கு வாசல் ராஜகோபுர புது மண்டபமும்,
சுதை வேலைகளும்.



ஸ்ரீ வள்ளிக்கல்யாணம்.

சிவகுகமயம்.

# சுவாமிமலை தலவரலாறு.

"வேண்டிய வரங்கொடுப்பான் மெய்கண்ட தெய்வம் இத்தெய்வம் அல்லாற் புவியில் வேறில்லை" என்று ஆறு முகக்கடவுள் அருட்பாலை இளமையிலேயே பருகிக் களித்த குமரகுருபர அடிகள் உறுதிகூறுகிறார்கள். ஆதலால் இக்கலியுகத்துக் கந்தனே கண்கண்ட தெய்வம். கந்தனை வழிபட்டு உய்தல் ஒவ்வொரு சைவசமயிகளுடைய கடமையும் ஆம். அன்றியும் சிவபெருமானே "நாமே கந்தனுவோம்" என்க் கூறுதலால் கந்தனை வழிபடுதல் கண்ணுதற் பெருமானை வழிபடுதலேயாம். ஆறுமுகப்பெருமான் ஆன்மாக்களாகிய நம்மை வலிந்தாட்கொள்ள "கந்தமும் பொதியிலும், சதுக்கமும் சந்தியும், குன்றுங்கானும் ஆதியாய இடங்களில் எழுந்தருளியிருக்கின்றார்" என்று திருமுருகாற்றுப்படை கூறுகிறது. குன்றுகளில் இயற்கைக் குன்றாயினும் செய்குன்றாயினும் செவ்வேளுக்குச் சிறந்தனவே. அவற்றுள் இத்தலம் செய்குன்று. இத்தலம் சுவாமிமலை என வழங்கும். சாமியென்பது சிவபெருமானுக்கே சிறந்த பெயராயினும் சாமிநாதன் என்ற திருப்பெயரின் பெயர் முதலாய் (நாம ஏக தேசம்) முருகனைக் குறிக்கும். ஆதலால் முருகன் எழுந்தருளிய மலை சுவாமிமலையாகும். இதற்கு இலக்கிய உலகில் திருவேரகம் எனப் பெயர் வழங்குகிறது. ஏர்-அழகு, எழுச்சி; அகம் – இடம், ஏரகம் – எழுச்சியும், அழகும் இயைந்த முருகன் எழுந்தருளிய இடம் என்பதாகும்.

இத்தலம் முருகன் சூரபன்மன் மேற் படையெடுத்த காலத்துத் தங்கிச்சென்ற ஆறுபடை வீடுகளில் நான்

காவதாகும். இது தஞ்சை ஜில்லாவில் கும்பகோணம் தாலூகாவில் உள்ளது. "சுவாமிமலை" கும்பகோணம் தஞ்சை ரயில்பாதையில் ஒரு புகைவண்டி நிலையம் உண்டு. ஸ்டேஷனுக்கடுத்து திருவலஞ்சுழி என்ற க்ஷேத்திரம் இருக்கிறது. அதிலிறங்கினுல் பாலங்கள் உடைய அரிசிலாறு(அரசலாறு) காவிரி என்ற இரண்டாறுகளையும் கடந்து வடக்குநோக்கி வரவேண்டும். சுமார் ஒருமைல் தூரம் இருக்கும், தார்ரோடும், வண்டி வசதியும் உண்டு. கும்பகோணம் புகைவண்டி நிலையத்திலிருந்து ஐந்துமைல் தூரம் இருக்கும். வண்டி போக்குவரத்து சுலபமாகக் கிடைக்கும். மோட்டார் வசதியும் உண்டு. கும்கோணம் இருந்து திருவையாறு போகும் பஸ்ஸில் ஏறினுல் சுவாமி மலை வடக்கு வீதியிலேயே இறங்கலாம். இங்கு ஒரு மலையுண்டு. ஆனுல் கட்டு மலை. திருக்கோயிலுக்குத் தெற்கில் சுமார் ஒரு பர்லாங் தூரத்தில் காவிரியாறு பாய்கிறது. தீர்த்தங்களும், குளங்களும் பல உண்டு. குளங்கள் சாதாரண வசதிக்கு ஏற்றவை.

**இடவசதிகள் :-** வழிபாட்டிற்கு வரும் அன்பர்கள் தங்குவதற்குப் பல மடங்களும், சத்திரங்களும் உள்ளன. ஒவ்வொரு கார்த்திகைத் திருநாளும், சஷ்டிநாளும் ஒரு பெருவிழா என்றே சொல்லு நிலையில் மக்கள் கூடுவார்கள் ஆதலால் ஒவ்வொரு வகுப்பினருக்கும் மடங்கள் இருக்கின்றன. அந்தணர்களுக்கு மட்டும் கிழண்டை மடவளாகத்து ஒரு சத்திரம் உண்டு. அது சங்கரி அம்மாள் சத்திரம் என்றும் சதுர்மென் கிருஷ்ணசாமிய்யர் சத்திரம் என்றும் வழங்கும். இதில் வருகிற அந்தணர்களுக்கு உணவு அளிக்க வசதியிருக்கிறது. தெற்கு வீதியில் ஜவுளி வர்த்தகர்களால் கட்டப்பெற்ற அர்த்தசாமக்கட்டளை மடம் ஒன்று உண்டு. இத்தலத்துக் கல்யாணம் காதுகுத்து முதலிய நற்கருமங்கள் நடத்துவோர் பெரும்பாலும் சங்கரி அம்மாள் சத்திரத்திலும், இம்மடத்திலும்

நடத்துவது வழக்கம். மற்றும் சௌராஷ்டிரர்கள் மடம், உடையார் மடம், கைக்கோளர் மடம், சேணியர் மடம், குயவர் மடம், கம்மாளர் மடம் முதலிய மடங்கள் பல உள்ளன. இவற்றில் வழிபாட்டிற்காக வரும் அந்தந்த வகுப்பார் தங்கலாம். ஆட்கொண்டார் மடம் ஒன்று உண்டு. அதில் வைகாசி மூல நக்ஷத்திரத்தில் ஞானசம்பந்த சுவாமிகள் குருபூசை நடக்கும். நகரத்தாருக்கும் நல்ல வசதியுடன் கூடியமடம் உண்டு. சென்ற 1955 வருஷம் மார்ச் மீ முதல் கோவிலின் மேற்கு பிராகாரத்தை ஒட்டி பதினெரு அறைகள் கொண்ட யாத்ரீகர் விடுதி ஒன்று அமைக்கப் பெற்றிருக்கிறது. குறைந்த வாடகையில் சகல வசதிகளுடன் கூடியது தேவையானல் சமையல் செய்வதற்கு பாத்திரங்களும் பெற்றுக்கொள்ளலாம்.

**கோயிலின் பொதுத்தோற்றம் :–** திருக்கோயில் புதிய திருப்பணி மூன்று கோபுரங்களையுடையது. அவற்றுள் கிழ்க்கோபுரமும் மேலக்கோபுரமும் தலையிடில்லாத மொட்டைக் கோபுரங்கள், அவற்றில் அழகிய வேலைப்பாடமைந்த சுதைத்திருவுருவங்கள் விளங்குகின்றன. தெற்குக் கோபுரம் பெரியது. அதுதான் இராஜகோபுரம் ஆகும். ஐந்து நிலைகளையுடையது. அழகிய சுதைச்சிற்பங்கள் நிறைந்தது, திருக்கோயில் திருவீதி மடவளாகம் சேர்த்து ஐந்து சுற்றுலைகளையுடையது. திருக்கோயிலின் நீளம் 300 அடி. அகலம் 295 அடி கோயிலுக்குள் மூன்று (பிரகாரங்கள்) சுற்றுலைகள் உள்ளன. முதற் பிராகாரம் அடிவாரத்திலுள்ளது. இரண்டாம் பிராகாரம் மலையின் நடுத்தலத்திலும், மூன்றும் பிராகாரம் மலையுச்சியில் சுவாமிநாதக் கடவுளைச் சுற்றியும் உள்ளன. முதற் பிராகாரம் மிகப்பெரியது. இராஜகோபுரத்தின் வழியாக உள்நுழைந்ததும் கருணைவடிவான அம்பிகை காட்சி வழங்குவர். தாயின் தண்ணருள் பெற்றுக்கொண்டே

சந்நிதியடைந்து இடது கைப்பக்கமாகத் திரும்பின் சிவ லிங்கப்பெருமான் திருவுருகாணப்பெறும். சுவாமி திரு நாமம் சுந்தரேசர். அம்மை திருநாமம் மீனுக்ஷி. இது ஒரு தனிக்கோயில் என்று சொல்லலாம். சுவாமி பிராகா ரத்து முறையே கணபதி, சோமாஸ்கந்தர், (உற்சவர்) விசுவநாதர், தக்ஷிணுமூர்த்தி, விசாலாட்சி, சமயாசாரியர் நால்வர், வள்ளி, தெய்வயானையம்மையாரோடு கூடிய முருகக்கடவுள் சந்நிதிகளும், (வடக்குப் பிராகாரத்து) நவக்கிரகங்கள் துர்க்கை சண்டேசர் முதலிய சந்நிதி களும் விளங்குகின்றன. அம்மை கோயிலையடுத்து விளங் குவது வசந்த மண்டபம். இதிலேயே திருவிழாக் காலங் களில் எழுந்தருள் உருவங்கள் இருந்தருள் வழங்கும். வசந்த மண்டபத்தை யடுத்துள்ளது மலையேறும் படிகள். அப்படிகளைக் கடந்து சென்முல் மலையின் நடுப்பிரகார மாகிய இரண்டாம் பிராகாரம். அதனையுங் கடந்து வலம் வந்து மேலே ஏறின் தலவிநாயகரும், கொடி மரமும் தோன்றும். தலவிநாயகர் கண்கொடுத்த விநாயகர் என வழுங்கப்பெறுகிறுர். வடமொழியில் நேத்திர விநாயகர் என அழைக்கப்பெறும். இவ்விநாயகர் பெருமான் முன்பு சிதறுகாய்கள் மிகுதியாக எப்போதும் உடைக்கப்பெறும். பெருமான் மிக வரதர். கொடிமரம் அன்பர்கள் பலருக்கு ஆதரவளித்து நிற்பது. தகடுவேய்ந்து பொன்முலாம் பூசப்பெற்றது. மிக அழகாக இருப்பது. சுவாமிநாதப் பெருமான் சந்நிதி கிழக்குப் பார்த்தது. அவர் சந்நிதியில் மகாமண்டபத்து வெள்ளையானை நிற்கின்றது.

சிவலிங்கப்பெருமான் திருமுன் நந்தி எழுந்தருளி யிருப்பதுபோல சாமிநாதப்பெருமான் திருமுன் எழுந் தருளியிருப்பது யானை. (மற்ற எல்லா சுப்பிரமணிய ஸ்தலங்களில் மயிலைத்தான் காணலாம்.) அதனை வழி பட்டு உட்புகுந்தால் முருகப்பெருமான் கருணை பொழி திருமுகத்தோடு காட்சி தருவர். பெருமான் திருவுருவமே

உயர்ந்த திருமேனி. தண்டம்பிடித்தருள் வழங்குந் திருகரமும் இடது தொடையில் அமைந்த அன்பர்கள் நெஞ்சங்கரைப்பன. அவரது திருக்கரத்தில் ஞானசக்தியாகிய வேல் சார்த்தப் பெற்று விளங்கும். கழுத்தில் விளங்கும் தாழ்வடமும் கண்மணியும், பரந்த திருமுகமும், கருணை பொழி கண்களும் காண்பார் கருத்தைவிட்டகலாதன. சாமிநாதப் பெருமான் திருமுன் மஹாமண்டபத்து இடது கைப்பக்கமாக அகஸ்தியர், அருகிரிநாதர் நவவீரர்கள் திருவுருவங்களும் வலது புறமாகக் கணநாதராகிய இடும்பனும் எழுந்தருளியுள்ளனர். கணநாதர் தோற்றம் வீரத்தோற்றமாகும். இவர்களை வழிபட்டு வலமாகவரின் பின்பக்கத்துச்சுற்றுலையில் விநாயகரும் உற்சவத்திருவுருவங்களான வள்ளி தெய்வயானையோடு கூடிய சுப்பிரமணியரும், விசாலாட்சி விஸ்வநாதரும், சந்திரசேகரரும் இலட்சுமி, சரஸ்வதிகளும் அடுத்தடுத்து விளங்குகின்றனர்.மற்ற சிவத்தலங்களைப்போலச் சந்திரசேகரர் என்றால் இறைவனுடைய இருபத்தைந்து மாகேச்சுரவடிவங்களில் ஒன்றல்ல. முருகன் தெய்வயானை அம்மையாரோடு மட்டும் எழுந்தருளிய திருக்கோலம். சந்திரசேகரர் நீர்விழாக் (தீர்த்தவாரி) கொண்டருள்வதுபோல இவர் தீர்த்தங்கொடுக்க எழுந்தருளுவர். இவர் பெயர் சேனபதி என்று வழங்கும். மற்றும் சுவாமிநாதசுவாமி உள்மண்டபத்து தெற்குப் பார்க்க " சபாபதி " என்ற திருப்பெயருடன் நான்கு திருக்கரங்களோடும், ஒரு அம்மையோடும் ஒரு திருவுருவம் உள்ளது. அது நடராஜப்பெருமான் திருவுருவமன்று. நான்கு திருக்கரங்க்ளில் இடது திருக்கரங்கள் இரண்டும் நடராஜப்பெருமானுடைய கரங்கள்போல நீட்டிப்பிடிக்கப்பெற்றுள்ளன. வலது கரங்கள் இரண்டும் கீழ்நோக்கி வளைந்து இருக்கின்றன. இத்திருமேனியும் முருகன் தெய்வயானை அம்மையாரோடு மட்டும் எழுந்தருளியுள்ள கோலம். இதற்கு பாகுலேயமூர்த்தி என்று திருநாமம்.

இவை இரண்டு திருவுருவங்களும் வேறு தலங்களிற்காண இயலாதான என்று சொல்லப்படுகிறது. உள்பிராகாரத்து வடபாகத்துச் சுவற்றில் ஒரு நடராஜா எழுந்தருளியுள்ளார். உருவம் மிகச்சிறியது. சிற்பத்திறம் செறிந்தது. இத்திருவுருவம் அருணகிரியார் புகழ்க் கோயிலும் பொருந்தியுள்ளது.

"அரியயனயறிந்திடாத அடியிணை சிவந்த பாதம்
அடியென விளங்கியாடும் நடராஜன்
அழலுறு மிரும்பின்மேனி மகிழ்மரகதம் பேணுகம்
அயலணி சிவன்புராரி அருள்சேயே"

என்பது திருப்புகழ்க்

கோயிலில் பொருந்தியுள்ள அறிவுத்திருவுரு. அதனை யடுத்த அறையில் உற்சவத்திருவுருவங்கள் திகழ்கின்றன அவை மாரி, பிடாரி, ஐயனர் முதலிய ஊர்காவற்தெய்வங்களும், வள்ளிநாயகியும், வேடத்திருவுருக்கொண்ட முருகனும், நம்பிராஜனும், நங்கையும், நாரதமுனிவரும், விநாயகப்பெருமானும், வீரபாகு, தேவர் முதலிய மூன்று வீரர்கள் திருவுருவங்களும் முறையே விளங்குகின்றன. அவற்றுள் வேடவடிவுக்கொண்ட முருகன் திருவுருவம் உச்சிக்கொண்டைமயிற் பீலியாடை முதலிய இயற்கை அழகு செறிந்து சிற்பத்திறம் விளங்குவன. இவற்றை யடுத்துச் சலவைக்கற்களால் காண்பார் கண்ணும் வழுக்கும் தன்மையில் ஆக்கம்பெற்ற அழகிய அறை. அதில் ஆறுமாமுகக் கடவுள் கையில் ஞான சத்தியாகிய வேலையேந்தி இருபெருந்தேவியர் இருமருங்கும் விளங்க எழுந்தருளியுள்ளார். அம்மையரும் ஆறுமுகக்கடவுளும் எப்போதும் கவசம் தரித்தே காட்சி தருவர். இவர் ஆண்டிற்கு ஐந்துமுறை எழுந்தருளி வீதியுலாவருவர். இவ்வறையின் கீழ்ப்பாக்கம் பள்ளியறை. பள்ளியறைக்கு எழுந்தருளுவது கந்தக்கடவுளே.

மேல் பிராகாரத்தில் மயில் வாகனத்தில் தண்ட பாணி எழுந்தருளியுள்ளார். அழகான திருவுருவம். ஆனால் இடதுகைப்பக்கத்துச் சிறிது பின்னப்பெற்றுள் ளது. ஹைதர் காலத்தில் ஹைதர் கலகக்காரர்கள் திரு வுருவத்தை உடைத்து வந்தார்கள் என்றும் முன்னெச் சரிக்கையாக சாமிநாதசுவாமி கருக்கோயிலை மறைத்துச் சுவர் எழுப்பிவிட்டு முன்பக்கத்து முற்குறித்த மயில் வாக னத்து தண்டபாணியை பிரதிட்டை செய்திருந்தார்கள் என்றும் வந்த கலகக்காரர்கள் இதனை உடைத்ததால் ஏற்பட்ட பின்னம் என்றும் பின்னப்பட்டாலும் உருவத் தின் அழகு பற்றி கோயிலுள்ளே வைக்கப்பெற்றுள்ளது. என்றும் கர்ணபரம்பரைச்செய்தி கூறப்பெறுகின்றது. இத் தலத்து நேத்திர புஷ்கரிணி, சரவணப் பொய்கை, வச்சிர தீர்த்தம் குமாரதாரை முதலிய தீர்த்தங்கள் உள்ளன. வசதிக்கேற்ற நீர் நிலைகள் பலவும் உள்ளன. தலவிரு க்ஷம் நெல்லி மரம்.

**சிற்பச்சிறப்புகள்:—** திருக்கோயில் முழுதும் புதுத்திருப் பணி. சாமிநாதசுவாமியின் கருக்கோயில் மட்டும் பழைய திருப்பணி. கற்பக்கிரகத்துச் சுற்றுச்சுவர்களில் திரணை வரி, பதுமவரி, முப்பட்டைவரி முதலியன செதுக்கப்பெற் றுள்ளன. புதுப்பணிக்கும், பழம்பணிக்குமுள்ள நயப் பாட்டை நன்கு விளக்கி நிற்கின்றன. மலைக்கோயில் முன் மண்டபத்துத் தூண்கள் யாளி நிலைவைத்து அழகு செய் யப்பெற்றுள்ளன. கொடுங்கைகள், தொங்கும் தாமரை மொட்டுவைத்து வேலை செய்யப்பெற்றவை. முன்மண்ட பத்துத் தூண் ஒன்றில் ஒரு அரசன் கற்சிலை நிற்கிறது. அது கார்த்தவீரியார்ச்சுனன் உருவம் என்று கூறப்பெறு கின்றது. இவ்வரசனே முதன் முதல் மலைக்கோயிலைத் திருப்பணி செய்வித்தான் என்றும் வரலாறு சொல்லப்பெறு கின்றது. இத்தலத்தில் வெள்ளிரதம் ஒன்றும் உள்ளது. மயில், குதிரை, மூஷிகம், படிச்சட்டம், இடபம் முதலிய

வெள்ளி வாகனங்களும், வெள்ளிப்பல்லாக்கும், யாஃன, காமதேனு முதலிய மர வாகனங்களும் இருக்கின்றன. பெருமான் சந்நிதியில் வெள்ளித்தட்டி, விளக்குகளும், சர விளக்குகளும் உள்ளன. நடராஜப்பெருமான் சந்நிதியிலும் இதர சந்நிதிகளிலும் பல குத்துவிளக்குகளும், பாவை விளக்குகளும் இருக்கின்றன. சுமார் 2 லக்ஷம் ரூபாய்க்கு மேற்பட்ட பெறுமானமுள்ள தங்கம், வெள்ளித் திருவாபரணங்களும், வைரங்கள், சிகப்புகள் இழைக்கப்பெற்றுள்ள திருவாபரணங்களும் இருக்கின்றன. அவற்றுள் மிகச்சிறந்தவை தங்க கவசமும், கல் இழைத்த கிரீடமும் ஆகும். இவைகள் நகரத்தாரால் செய்துவைக்கப்பட்டது. மற்ற கல்லிழைத்த வேலாயுதம் திருப்பனந்தாள் ஆதினகர்த்தர்களாலும், செய்துவைக்கப் பெற்றது. சுவாமிநாதசுவாமிக்கு மருந்து சாத்தி அதன் மேல் தங்கத்தகடு மெருகப்பெற்றிருந்தது.

## தலபுராண வரலாறு :—

**I தலம் :—** சுவாமிமலே, திருவேரகம், குருமலே, தாத்ரீகிரி, சுந்தராசலம் எனப்பலபெயர்கள் வழங்குகின்றன. குமாரப்பெருமானிடம் விளேயாட்டாக உபதேசங்கேட்ட சிவபெருமான் முருகனைப் பார்த்து “ நீதான் எனக்கு சாமி ஆதலால் இத்தலம் சாமிமலே என வழங்குக ” என ஆணை தந்தமையால் சாமிமலே எனப் பெயராயிற்று. சரவண பவன் குருவாக எழுந்தருளியிருக்கும் இடமாலின் குருமலே என்றும், பூமிதேவியே நெல்லிமரமாக இருத்தலின் தாத்ரீகிரி என்றும், மிக அழகிய இடமாதலின் சுந்தராசலம் என்றும், பெயராயிற்று.

முன்னொரு காலத்துப் பிருகதசுவர் என்ற அந்தணர் ஒருவர் இருந்தார். கலேகள் யாவுங் கற்றவர். மனவடக்கம் வாய்ந்தவர். இறைவனே ஊனக்கண்ணுலும் காண விரும்பிப் பல தலங்களிற் சென்று எண்ணம் ஈடேருமல்



கோவிலின் உள் தோற்றம் புது நடவான மண்டபத்துடன்



நேத்திர புஷ்கரணியும், கோவிலும்.

திருவேரகம் வந்தனர். எல்லையை யடைந்ததும் எண்ணம் முற்றினர். வச்சிர தீர்த்தத்தின் பக்கலிலேயே ஒரு மடம் ஸ்தாபித்து வசித்தனர். ஒருநாள் பிரமகத்தி செய்த பிராமணன் ஒருவன் அவரைக் கண்டு வணங்கி இப்யாவம் கழியும் உபாயம் என்ன? என்று கதறினன். உடனே பிரகதசுவர் 'நீ பல பிறவிகளிற் செய்த சிறு புண்ணிய சேடத்தால் இங்கு வந்தனை, அஞ்சாதே' என்று மனந்தெளிய ஒரு வரலாறு கூறினர்.

ஆடைதிருடி விற்றுப்பிழைக்கும் அந்தணன் வெண் குட்டம் பிடித்தவன் ஒருவன் பசியால் அலைந்து இத் தலத்தை யடைந்தான். இரவு நேரம். எல்லோரும் உறங்கினர். ஒரு வீட்டிற் புகுந்தான். உணவைத்திருடி உண்டான். வீட்டார் ஓசை கேட்டு விழித்தனர். இவனை அடித்து வெருட்டி ஒரு கிணற்றில் தள்ளினர். தள்ளிய கிணறு வச்சிர தீர்த்தம். இரவு முழுதும் குளிரால் வருந்திய அவன் விடிந்ததும் கரையிற் பேச்சரவங்கேட்டு அலறினன். ஊரவர்கள் கூடிக் கரையேற்றினர். அந்தணன் தன் மேனியைத் தானே கண்டு அதிசயப்பட்டான். வெண்குட்டம் போய்த் தங்க நிறமாயிற்றே என்று வியந்தான். ஊரவர்களும் அவன் வாயிலாக அறிந்து மகிழ்ந்தனர். ஆதலால் நீயும் இதில் மூழ்கித் தவஞ்செய்யின் பிரமகத்தி நீங்கப்பெறுவாய் என்று பிரகதசுவர் கூறினர். அவன் அவ்வாறே செய்து பயன் பெற்றான். யஞ்ஞமித்திரன் என்பானும் பன்னிரண்டு ஆண்டுத் தவஞ்செய்து இறைவனால் அறிவிக்கப்பெற்று இத்தலத்தை யடைந்து காவிரியில் நீராடிக் கந்தனை வழிபட்டு தன்மகன் ஊமை நீங்கப்பெற்றான். தன் மகன் நிறைந்த கல்விமானாக ஆனதையும் அறிந்து மகிழ்ந்தான்.

இவ்வாறு இத்தலத்து வசிப்பார் நோய் நீக்கம், பாவக் கழிவு, கல்விப்பேறு, மக்கட்பேறு எல்லாம் எய்தப்பெறுவர் என்பது பல வரலாறுகளால் அறியப்பெறுகின்றது.

## II தீர்த்தம் :—

**1 வச்சிர தீர்த்தம் :—** இது மீனாக்ஷி சுந்தரேசர் திரு முன் அம்பிகைக்குப் பக்கத்திலுள்ளது. இதனையே க்ஷேத்திரகூபம் ஸ்வாமிகூபம் என்று புராணம் பேசுகிறது. உபதேசம்பெற விரும்பிய சிவபெருமானுடைய சூலாயுதத் தால் உண்டாக்கப் பெற்றது. ரவிமித்திரன் என்னும் அந்தணன் இதில் மூழ்கிப் பிதிருகடன் செய்து குலத்தை ஈடேற்றினன். புஷ்பவனம் என்ற ஊரில் வசித்த வசு என்பான் தன் மனைவி காந்திமதியுடன் மகப்பேறு கருதி தீர்த்தயாத்திரை செய்து வந்தான். ஒரு நாள் காட்டி லுள்ள ஒரு குளத்தில் நீராட வசு ஆணுருமாறி பெண் ணுருவாய் வசுமதியாயினள். மனைவி கவன்றாள். நாரதர் ஆணையின்படி சுவாமிமலையில் இத்தீர்த்தத்து நீராடி ஆணுருவம் அடைந்து புதல்வனையும் பெற்று மகிழ்ந் தான். ஆகவே இத்தீர்த்தம் உடல் நோய் நீக்கும் மக்கட்பேறு அளிக்கும். இதுவே இறைவனுக்குரிய திருமஞ்சன தீர்த்தமுமாகும்.

**2 குமாரதாரை :—** இது அம்மன் சந்நிதிக்கெதிரில் சுமார் ஒரு பர்லாங் தூரத்திலிருப்பது காவிரியாறு. கங்கா தேவி தன் பாவம் நீங்கத் தாழ்சடைப்பெருமானை வேண்டி இத்தலத்துக் காவிரியோடு கலந்து எப்போதும் உறை கின்றாள். குமாரக்கடவுள் அருள் பெற்றாள். ஆதலால் குமாரதாரையெனக் கூறப்பெறுகின்றது.

**3 சரவண தீர்த்தம் :—** இது திருக்கோயிலுக்கு ஈசானிய மூலையில் இருக்கிறது. சரவணன் என்னும் பிரா மணச்சிறுவன் ஜமதக்கினி முனிவருடைய சாபத்தால் கரடியான தன் தந்தை மூழ்கிச் சாப நீங்குவதற்காக உண் டாக்கினன்.

**4 நேத்திரபுஷ்கரணி :—** இது சுவாமிநாதசுவாமி திரு முன் கீழவீதியில் உள்ளது. ஒரு அழகிய குளம். இப்

போது திருப்பணி நிறைவேறித் தனியழகோடு விளங்கு கிறது. கந்தப்பெருமான் கைவேலாகிய ஞான சக்தியால் உண்டாக்கப்பெற்றது. இது ஸ்வாமி புஷ்கரணி என வழங்கும். பார்க்கத் தகாதவற்றைப் பார்த்துச் சாபத்தாற் குருடனான சுமதி என்பவன் பரத்வாஜருடைய ஆணையால் இத்தீர்த்தத்து மூழ்கிக் குமாரக்கடவுள் அருளாற் கண் பெற்றான். இத்தீர்த்தத்து கார்த்திகை மாத ஞாயிற்றுக் கிழமை தோறும் தீர்த்தவிழா நடைபெற்றது. அன்றியும் சப்தரிஷி வாக்கியம் என்னும் சோதிட நூலில் பரிகார காண்டத்து இத்தீர்த்தம் மிகச் சிறப்பாக எடுத்துக் காட்டப் பெற்றுள்ளது.

## III மூர்த்திகள் :—

**1 மீனாட்சி சுந்தரேசர் :—** மதுரை யரசனாகிய வரகுண பாண்டிய தேவர் அறியாமலே செய்த அந்தணக் கொலை யால் வருந்தி திருவிடைமருதூரை யடைகின்றவர் வழி யில் இத்தலத்துத் தங்கினார். சுந்தரேசனை வழிபடாது உணவருந்துவதில்லை என்பது அவர் நியதி. ஆதலால் தனது ஆன்மார்த்தமாகிய சுந்தரேசரையும் மீனாட்சியை யும் தாபித்து வழிபட்டனர். பின் திருவிடமருதூரை யடைந்தார். ஆதலால் இத்தலம் வரகுணபாண்டிய தேவர் திருப்பணி என்பதுபோதரும்.

**2 கண்கொடுத்த விநாயகர் :—** கொங்கு தேசத்துப் பிறவிக்குருடன் ஒருவன் உணவு அகப்படாமையால் உப வாசமிருந்து 'விடியல்காவிரி நீராடி நேத்திர புஷ்கரணி யிலும் நீராடி வருகின்றவன் மலைமேல் விநாயகர் சந்நிதி யடைந்தான். வழிகாட்டிவந்தவர்கள் இது விநாயகர் சந்நிதி என்று அவன் அகக்கண்ணிற்கு அறிவித்தனர். குருடன் விநாயகப்பெருமான் கருணையால் புறக்கண்ணும் பெற்று அகக்கண் ஆனந்தம் எய்தினன். அது முதல் கண் கொடுத்தார்' என்று கணபதிக்கு பெயராயிற்று.

**3 சுவாமிநாதக் கடவுள் :–** திருக்கைலாய மலையில் செம்பொற்றிருக்கோயிலின் அத்தாணி மண்டபத்துச் சிங்காதனத்துச் சிவபெருமான் அம்மையாரோடு எழுந்தருளியிருந்தபோது தேவர்களும் முனிவர்களும் பஞ்சாக்கரங்களும் அவற்றின் சிறப்பும் பொருளும், செபிக்கு முறையும் உபதேசித்தருள வேண்டினர். சிவபெருமான் பிருகு முனிவர் சாபத்தால் நான் மறந்தேன். ஆனால் என் குமாரன் முருகனுக்குத் தெரியும். அவனிடம் உபதேசம் கேட்டு வருகிறேன் என்று கூறி இத்தலத்துக்கு முருகனைத் தேடி எழுந்தருளுகின்றவர் கைலாசகிரியின் சிகரங்களில் ஒன்றைக் கொண்டுவந்து நிறுவி முருகனை அதன்மேல் இருக்கச்செய்து கைகட்டி வாய்பொத்தி உத்தம மாணவ நிலையில் நின்று உபதேசங்கேட்டுத் திருவிடைமருதூரை யடைந்தார் என்று வடமொழித் தலபுராணம் வகுக்கின்றது. இவ்வரலாறு இயற்கையுணர்வினராகிய இறைவனுக்கு, நினைப்பும் மறப்பும் கடந்த இறைவனுக்கு மறப்புண்டு என்றும் அதுவும் ஆன்ம இயல்பைக்கடந்து அவரவர் வினைக்கீடாக ஆட்டுவிக்கும் இறைவனுக்கும் ஆன்மாக்களில் ஒருவராகிய பிருகுமுனிவர் சாபம் பலித்ததென்றும் அறிவிக்கின்றது. ஆனால் பொதுநூலாகிய சிவரகசியத்தின் வழித்தாகிய கந்தபுராணத்து பிரணவப்பொருளை யறியாது படைத்தற்றொழிலை நடத்திய பிரமனைக் குட்டிச் சிறைப்படுத்திய குமாரக்கடவுள் படைத்தற்றொழிலைத் தானே செய்துவந்தனர். தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட நந்தியந்தேவரையனுப்பிச் சிவபெருமான் பிரமனைச் சிறைவிடுவித்தார். பின்னர்க் குமரனை யழைத்துத் திருவிளையாட்டாக 'நீ பிரணவப்பொருள் அறிவாயோ' என்றார். முருகன் 'ஆம் அறிவேன்' என்றார். சிவபெருமான் சொல்லுக என்ன, திருவுளக்குறிப்பில் நிறைந்தொழுகும் விளையாட்டுத் தன்மையுணர்ந்த முருகன் தானும் சிறுகுறும்பு தெரிக்கும் புன்முறுவலுடன்

'முறைப்படி கேட்டால் உபதேசிப்பேன்' என்றனர். பெருமானும் தன் மகனுக்குத் தலைமைதந்து விளையாட்டாகவே நின்று கேட்டு மகிழ்ந்தார்' என்று கூறப்பெற்றுள்ளது. இதனை வலியுறுக்கும் மேற்கோள்கள் "அகமகிழ்வெய்தியங்கண் தன்னிளங்குமரன் தன்னைத் தலைமையோடிருப்ப நல்கி" என்பதாகும். அதே நூலில் பாயிரத்துள்ள "தாரகத்துருவமாந்தலைமையெய்திய ஏரகத் தறுமுகன்" என்பதுமாகும். இப்பகுதிகள் சைவநெறி தவருத கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் திருவாக்கு. இம்மூன்னூற் கருத்துக்களைத்தழுவியே "பொன்னனங்கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப, முன்னம் பிரமம் மொழிந்தோனே" என்று ஒரு அருள்வாக்கு விளக்கி நிற்கின்றது.

**வெள்ளையானை :-** ஹரிகேசன் என்னும் அரக்கனுல் இந்திரன் படைவலியும் தன்வலியும் இழந்தான். வருந்திய அவனுக்கு அசரீரி வழிகாட்ட இத்தலம் அடைந்து வழிபட்டு வன்மை பெற்றுச்செல்கின்ற அவன் தன் நினைவுக்குறியாக ஐராவ்தத்தை நிறுத்திச் சென்ருன்.

**தல விருக்ஷம் :-** நெல்லி மரம். இது மலைப்படிக்கு கிழக்கே மடப்பள்ளி ஓரமாக இருக்கிறது. பூமிதேவி சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணிலிருந்துண்டான தீப்பொறிகளைத் தாங்கியபடியால் பார்வதிதேவியால் சபிக்கப் பெற்ருள். விஷ்ணுவின் ஆணைப்படி இத்தலம்வந்து குமாரக்கடவுள் அருளால் சாபம் நீங்கப்பெற்றும் குமாரக் கடவுளைப் பிரிய மனமில்லாமல் நெல்லிமரமாகத் திருமுன் நிற்கின்ருள் என்பது வரலாறு.

## பிறதலபுராணங்களிற் காணப்பெறும் வரலாறுகள் :-

குடந்தை புராணத்துச் சுவாமிமலைப் படலத்து மலைப் படிகள் அறுபது என்றும் அவை பிரபவ முதலிய அறுபது வருட தேவர்கள் படிகளாக அமைந்திருக்கின்றனர் என்றும் வழிபாட்டிற்காக வருவோர் முதற்படியில் தேங்காயுடைத்துத் தீபாராதனை செய்து விடைபெற்றே மேலேறிச் செல்லல் வேண்டும் என்றும் விதித்திருக்கின்றது.

" வரு பிரபவமுதல் வருட தேவர்கள்
திருவாளர் அம்மலைச்சேறிந்த பல்படி " என்றும்
திருவளரப்படி தெங்கங்காய் தகர்த்து
உருவளர் மலையிவர்ந்து.

*என்றும் வருவன அப்பாடற பகுதிகள்.*

திருவிடைமருதூர்த் தலபுராணத்து 'தென்னுடு முழுதுமே ஒரு சிவாலயமாகவும் சிதம்பரம் திருவாவடுதுரை முதலியன பரிவாரக் கடவுளர் இருக்கும் தலங்களாகவும் திக்கு முறைப்படி அமைந்துள்ளன என்றும் அவற்றுள் முருகன் தலம் திருவேரகமாகிய சுவாமிமலை என்றும் கூறப்பெற்றுள்ளது. இதனை 'அணி புகழும்' என்ற முதற் குறிப்பையுடைய செய்யுளில் " திணிபுகழாலங்குடியிற் குருமூர்த்தியானைத் திருமுகத்தோன் வலஞ்சுழியேரகத்திற் செய்வேள்" என்றும் பாடற் பகுதி வலியுறுக்கும்.

## பொது வரலாறும்-மக்கள் அடையும் பயனும:-

சுவாமிநாதக்கடவுள் அந்தணர் முதலாகிய எல்லாருக்கும் குலதெய்வமாக விளங்குகின்றார். இவர் அருளால் மக்கட்பேறு கைப்பலனுகக் கிடைத்து வருவதால் திருமணங்கள் பல இத்தலத்து நடக்கின்றன. குழந்தைகள் எல்லா வளர்ச்சியும் எய்த முடிகழித்தல் காது குத்தல் முதலியன இங்கு நடத்தப்பெறுகின்றன. நோய்வாய்ப்பட்டார் தூய்மையாக நேர்த்திக்கடன் கழிப்பின் நோய் நீங்கப்பெறுகிறது.

இத்தலத்தை பஞ்சக்குரோச யாத்திரை செய்து வழிபட வேண்டும் என்று புராணம் வகுக்கின்றது. முறையே திருவலஞ்சுழி திருப்புள்ளம் பூதங்குடி, திருவேரகரம் கும்பகோணம் இவற்றை வழிபட்டுச் சுவாமிமலையை வணங்கவேண்டும் என்கிறது.

## தலபுராணத்தாலறியப்பெற்று ஆராய்ச்சிக்குரியன:-

பஞ்சக்குரோச முறைப்படி யாத்திரை செய்வோர் சுவாமிமலையை யடைந்ததும் கோபுரவாசல் நடுவில் இருக்கும் இருதெய்வப் பெண்களை வணங்கிப் பிரதக்ஷிணம் செய்யவேண்டும் என்று தெரிகிறது. குறிக்கப்பெற்ற

கோபுரம எது? தெய்வப்பெண்கள் யார்? என்பது இப்போது அறியக்கூடவில்லை. மற்றும் ஏழு கோபுரங்கள் இருந்தன என்றும் தலபுராணம் கூறுகிறது. அவற்றின் விவரங்களும் அவ்வுருவங்களும் காணப்பெறவில்லை.

## நாட் பூசையும்–பெரு விழாவும்:-

மலைக்கோயிலுக்கு ஆறுகாலங்களும் கீழ்க்கோயிலுக்கு நான்கு காலங்களும் நடக்கின்றன. மலைக்கோயிலில் விசேஷமாக நடப்பவை காலை உஷக்காலமும், மாலை இரண்டாம் காலமும் ஆகும். அவற்றுள் பால் நைவேத்தியம் காலை 6–15 மணிக்கும் உஷாக்காலம் 7-30 மணிக்கும் கால சந்தி 9 மணிக்கும் உச்சிக்காலம் 12 மணிக்கும் மாலை சாயரக்ஷை 5-30 மணிக்கும் இரண்டாம் காலம் 7–30 மணிக்கும் அர்த்தயாமம் 9 மணிக்கும் நடைபெறும். ஒவ்வொரு கார்த்திகை நக்ஷத்திரந்தோறும் அபிஷேகங்கள் பல நடைபெறும். ஷஷ்டி திதிகள், செவ்வாய், வியாழன், வெள்ளிக்கிழமைகளில் கட்டளை அர்ச்சனைகளும் சாதாரண அர்ச்சனைகளும் மிகுதியாக நடைபெறும். பலர் பிரார்த்தனைக் காவடிகள் எடுத்துச் செலுத்துகிறார்கள்.

இக்கோயிலின் முக்யமான மூன்று ப்ரம்மோத்சவங்களும் (கார்த்திகை, புஷ்யம், சித்திரை) ஸ்கந்தசஷ்டியும், ஸ்ரீ வள்ளிக்கல்யாணம் பங்குனி உத்திரத்துக்கடுத்த நாள் முதல் ஆரம்பித்து அதிவிமரிசையாய் நடைபெறும்.

**திருப்பணிகள் :-** பிற்கால திருப்பணிகள் கானாடுகாத்தான் ஸ்ரீ அருணாஜலம் செட்டியாரால் தன்னுடைய பொருளினால் கருங்கல் திருப்பணியும், பிறகு கோயில் பொருள் கொண்டு ஸ்ரீ ஷண்முகம் செட்டியாரால் மற்றவையும் செய்யப்பட்டிருக்கிறது. மானேஜிங் டிரஸ்டி கொரடாச்சேரி ஸ்ரீ S. ராமா அமிர்த உடையார், அவர்கள் 1948-ம் வருஷம் கோவில் பூராவுக்கும் தன் சொந்த பொருளினால் ரூ. 5500 செலவு செய்து மின்சார விளக்குகள் போட்டுவைத்தார். மற்றும் மேற்படியாருடையவும், டிரஸ்டிகள் சுவாமிமலை ஸ்ரீ அப்புராயர் என்கிற B. ராமச்சந்திர ராவ், கபிஸ்தலம் ஸ்ரீ நாகராஜ மூப்பனார் அவர்களின் முயற்சியாலும், முன்னாள் நிர்வாக

அதிகாரி ஸ்ரீ S. R. கோவிந்தராஜுலுவின் ஊக்கத்தினு லும், ராஜ கோபுரத்திற்கு முன் அழகிய சுதை வேலைப் பாடுள்ள புதுமண்டபமும், ராஜகோபுரத்திற்கும் அம்பாள் கோயிலுக்கும் மத்தியில் மண்டபமும், ஸ்ரீ வல்லப கணபதி மண்டபமும், இரண்டாம் பிரகார மண்டபமும், புதிதான தேவஸ்தான அலுவலகமும், யானைக்கு கொட்டகையும் புதிதாகக் கட்டப்பட்டிருக்கின்றன. மேல் கோவில் பிர காரங்களுக்கு தளவரிசை போட்டு, ஸ்ரீ லக்ஷிமி, ஸரஸ்வதி சந்நிதிகளை பிராதான்யத்திற்கு கொண்டு வரப்பட்டது. யாத்ரீகர் தங்குவதற்குப் புதிதாக விடுதிகள் சகல வசதி களுடன் கட்டப்பட்டிருக்கிறது. மற்றும் 145 அடி நீளம் 40 அடி அகலமுள்ள ஒருமண்டபம் ராஜ கோபுரத்திற்கு மேற்கு பக்கத்தில் கட்டப்பட்டுவருகிறது. மேலும் நேத் திர புஷ்கரணிக்கு பாய்கால் வடிகால் வசதிசெய்ய ஏற் பாடாகியிருக்கிறது.

ஆறுபடை வீடுகளில் நான்காவதாக உள்ளதும் ஞான வள்ளலாக எழுந்தருளியிருக்கும் ஞானஸ்கந்தனை வழிபட்டு எல்லா இன்பங்களையும் எய்துவோமாக.

கலியுக தெய்வமாகிய கண்கண்ட தெய்வத்தின் மெய் கண்ட மூர்த்தியின் கழலிணை போற்றியுய்வோமாக.

**ஸ்ரீ T. V. சுப்ரமணிய அய்யர்,** *சேர்மன்.*
**ஸ்ரீ T. PL S. S. சுப்ரமணியஞ் செட்டியார்,**
**ஸ்ரீ A. R. N. சாரங்கபாணி உடையார்,**
**ஸ்ரீ S. ராமா அமிர்த உடையார்,**
**ஸ்ரீ R. சுப்ரமணியன்,**

*டிரஸ்டிகள் போர்டு.*

*சுவாமிமலை,*
28—8—1956.

**P. K. வைத்யநாதன்,** B. Sc,
*எக்ஸிக்யூடிவ் ஆபீஸர்.*

Printed by S. Kalyanasundaram at the Sri Janardana Printing Works Ltd., T H S. Road, Kumbakonam and
Published by P. K Vaidyanathan, B. Sc., Executive Officer
Sri Swaminatha Swami Devasthanam, Swamimalai. 7—9—56.



கோவிலுக்கு மேல்புரம் கட்டப்பட்டிருக்கும் யாத்ரீகர் விடுதி